### சிறு பாசனத் திட்டங்கள்

14. விவசாய உற்பத்தியை அதிகரிப்பதற்கான பற்பல திட்டங்களில் குறுகிய காலத்தில் பலன்கள் தரும் திட்டங்களில்தான் இப்பொழுது சிறப்பாகக் கவனம் செலுத்துகிறேம். சிறிய பாசனத் திட்டங்களை நிறைவேற்றுவதில் இந்த அரசாங்கம் தொடர்ந்து காட்டிவரும் அக்கறை இச் சபைக்கு நன்கு தெரியும். சிறிய பாசனத் திட்டங்களுக்கென மூன்றும் திட்டக் காலத்தில் நாம் ஒதுக்கியுள்ள 12 கோடியே 80 லட்ச ரூபாயில், 1961-62-ல் நாம் 2 கோடியே 98 லட்சம் ரூபாய் செலவு செய்துள்ளோம். நடப்பு ஆண்டில் முதலில் 3 கோடியே 12 லட்சமும், அடுத்த ஆண்டில் 3 கோடியே 65 லட்சமும் ஒதுக்கியிருக்கிறேம். குறிப்பாக, இந்த பட்ஜெட்டில் புதிய கிணறுகள் தோண்டும் உதவித் திட்டங்களுக்கு 97 லட்சம் ரூபாய் கடன்களாகவும் 16 லட்சம் ரூபாய் மானியமாகவும் கொடுக்க வகை செய்துள்ளோம். பம்பு செட்டுகள் வாங்குவதற்காக வழங்கும் கடன்களுக்கென 1962-63-ல் 17.4 லட்சம் ரூபாய்தான் ஒதுக்கியிருந்தோம். 1963-64-ல் இதை 22.16 லட்சம் ரூபாயாக உயர்த்தியிருக்கிறேம். இத் திட்டத்தின்கீழ் 245 எண்ணெய் என்ஜின்களும், 1,800 மின்சார மோட்டார்களும் வழங்கப்படும். சிறிய பாசன ஆதாரங்களை அபிவிருத்தி செய்ய இவ்வாறு பெரும் அளவில் செலவு செய்யும் நேரத்தில், ஏற்கனவே இருக்கும் சிறு பாசன ஆதாரங்களைச் சரியாகப் பராமரிப்பதிலும் நாம் கவனம் செலுத்தவேண்டும். இச் சிறிய பாசன ஆதாரங்களில் பெரும்பாலானவை இப்போது பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன. இந்த ஆதாரங்களைச் சரிவரப் பராமரிப்பதில் தங்களுக்குள்ள பொறுப்புக்களை அவர்கள் உணர்ந்து நடவடிக்கைகள் எடுப்பார்கள் என நான் நம்புகிறேன். சிறிய பாசன ஆதாரங்களைப் பராமரிப்பதற்கென 27 லட்சம் ரூபாய் ஸ்தல பாசன மானியமாக ஒதுக்கியிருக்கிறேம்.

### பெரிய, நடுத்தரப் பாசனத் திட்டங்கள்

15. நமது பெரிய, நடுத்தரப் பாசனத் திட்டங்களும் திருப்திகரமாக முன்னேறி வருகின்றன. நமது மாநிலத்தில் இப்பொழுது நிறைவேற்றப்பட்டு வரும் திட்டங்களில் மிகவும் பெரியது பரம்பிக்குளம்-ஆளியாறு திட்டமாகும். இத் திட்டத்தின்கீழ் கோயம்புத்தூர் மாவட்டத்தில் 2.4 லட்சம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி ஏற்படும். ஆளியாறு அணைக்கட்டு வேலை பூர்த்தியாகி, நடப்பு ஆண்டில் சுமார் 7,500 ஏக்கர் நிலங்களுக்குத் தண்ணீர் விடப்பட்டது. 1963-64-ல் இத் திட்டத்திற்கென 4 கோடியே 62 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறேம். தவிர, பாலாறு அணைக்கட்டு, கால்வாய்கள் இவற்றின் சீரமைப்பிற்காக 17.65 லட்சம் ரூபாயும், சாத்தனூர் திட்டம் இரண்டாம் நிலைக்காக 8.45 லட்சம் ரூபாயும் இந்த பட்ஜெட் மதிப்பீடுகளில் ஒதுக்கியுள்ளோம். மற்ற நடுத்தரப் பாசனத் திட்டங்களில், மதுரை மாவட்டத்தில் மஞ்சளாறு திட்டமும், தென் ஆற்காடு மாவட்டத்தில் கோமுகி நதித் திட்டமும் முறையே, 66 லட்சம் ரூபாய் செலவிலும், 87 லட்சம் ரூபாய் செலவிலும் அனுமதிக்கப்பட்டுள்ளன. இந்த நடுத்தரத் திட்டங்களுக்

1st March 1963]

காக 5 லட்சம் ரூபாய் அடையாள நிதி ஒதுக்கம் செய்யப்பட்டுள்ளது. இத் திட்டங்கள் நிறைவேற்றப்படும் விரைவினைப் பொறுத்து, மேலும் நிதி வசதிகளைச் செய்து கொடுப்போம்.

### கால் நடை வளர்ச்சித் திட்டங்கள்

16. உற்பத்தி அளவைப் பெருக்குவதற்கான நமது பன்முனை முயற்சியில், பால் போன்ற உப உணவுப் பொருள்களின் உற்பத்தியையும் கவனிக்க வேண்டும். இக் கருத்தின் அடிப்படையில் நமது கால்நடை வளர்ப்புத் திட்டங்கள் முக்கியத்துவம் பெருகின்றன. கால்நடை வளர்ப்பு சம்பந்தமான பற்பல வேலைகளுக்காக, 1963-64-க்கான திட்டத்தில் 55.56 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். நமது கேந்திரக் கிராமத் திட்டங்கள் திருப்திகரமாய் முன்னேறி வருகின்றன. இத் திட்டங்களைத் தொடர்ந்து செயலாற்றவும் மேற்கொண்டு விரிவு படுத்தவும் போதிய அளவு நிதி ஒதுக்கியிருக்கிறோம். 1963-64-ல் நான்கு புதிய கேந்திரக் கிராம வட்டாரங்களை ஏற்படுத்த உத்தேசித்து, இத் திட்டத்திற்கென பட்ஜெட்டில் மொத்தம் 10½ லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். கால்நடைகளின் வைத்திய உதவிக்கான வசதிகளைப் பரவலாகச் செய்யும் நமது நீண்டகால திட்டத்தின் ஓர் அம்சமாக, 1963-64-ல் 30 கால்நடை வைத்திய மருந்துச்சாலைகளைத் துவக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். ஒவ்வொரு வட்டாரத்திற்கும் ஒரு மருந்து நிலையம் ஏற்படுத்துவது என்பதுதான் நமது குறிக்கோளாகும். பொது மக்களுக்கும், ராணுவப்படைகளுக்கும் பெருமளவிற்கு முட்டைகள் தேவைப்படும். என்வே, இதன் உற்பத்தியைப் பெருக்குவது அவசியம். உயர்ந்த இனக் கோழிகளையும் மற்றும் கருவிகளையும் வழங்கும் திட்டங்களைத் தொடர்ந்து நிறைவேற்றுவதோடு அதிகப் பணமும் ஒதுக்கியிருக்கிறோம். அடுத்த ஆண்டில் கோழி வளர்ப்பு நிலையங்கள் நான்கினை ஏற்படுத்த உத்தேசிக்கிறோம். மொத்தத்தில் கோழி அபிவிருத்தி சம்பந்தமான பற்பலத் திட்டங்களுக்காக சுமார் எட்டரை லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

### பால் திட்டங்கள்

17. சென்னை நகரத்தின் பால் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான விரிவான திட்டத்தில் நமக்கு ஓரளவு வெற்றி கிட்டியுள்ளது. சென்னை நகர எல்லையில் மாதவரத்தில் கால்நடைப் பண்ணை ஒன்றை ஏற்படுத்தியிருக்கிறோம். இந்தப் பண்ணையில் இப்போது மூவாயிரம் மாடுகளுக்குமேல் உள்ளன. இந்தப் பண்ணையில் உற்பத்தியாகும் பால் மட்டுமன்றி, அண்டைக் கிராமங்களிலிருந்தும் பால் சேகரிக்கப்படுகிறது. தவிர, ஈரோடு பகுதிகளிலிருந்தும் பால் தருவிக்கத் தொடங்கியுள்ளோம். இப் பகுதிகளிலிருந்து தருவிக்கும் பாலின் அளவு தினசரி 25 ஆயிரம் லிட்டர் அளவிற்கு உயரும். இப் பண்ணையிலுள்ள மத்திய நிலையம் இப்போது அன்றாடம் 25 ஆயிரம் லிட்டர் பாலை சென்னை நகரத்தில் வழங்குவதற்காகப் பதன்படுத்தி வருகிறது. இந்த நிலையம் நாளாவட்டத்தில் 75 ஆயிரம் லிட்டர் அளவிற்குப் பாலைப் பதன்

படுத்தும். இங்ஙனம் தொலைவிலுள்ள நகரங்களில் பால், பால் பொருள்கள் முதலியவை நல்ல விலைக்கு உறுதியாக விற்கும் என்கிற நிலையை ஏற்படுத்துவதன் மூலம்தான் நாம் கிராமப் பகுதிகளில் பால் உற்பத்திக்கு ஊக்கம் அளிக்க முடியும். பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கறவை மாடுகளை வாங்குவதற்காக மொத்தம் சுமார் 37 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். மதுரை மாநகரிலும் 78 லட்சம் ரூபாய்ச் செலவில் பால் வழங்கும் திட்டம் ஒன்றை அமுல் நடத்த இருக்கிறோம். இந்தத் திட்டத்திற்கு **UNICEF** ஸ்தாபனத்தார் 31 லட்சம் ரூபாய் மதிப்புள்ள இயந்திர தளவாடங்களை இலவசமாக வழங்க முன்வந்துள்ளனர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன். இத்திட்டத்தின்கீழ் குறைந்த வருமானமுள்ள சுமார் 12 ஆயிரம் குடும்பங்களுக்கு மலிவான விலைக்குப் பால் வழங்கப்படும். இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதையொட்டி பூர்வாங்க வேலைகளைத் துரிதப்படுத்துவதற்காக அரசாங்கம் சமீபத்தில் விசேஷப் பொறியியல் பணியாளர்களை நியமித்திருக்கிறது.

### மீன் வளம்

18. மீன்வள அபிவிருத்தித் திட்டங்களுக்காகவும் அதிகத் தொகை ஒதுக்கியிருக்கிறோம். 1963-64-ம் ஆண்டிற்குரிய திட்டத்தில் மீன்வள வளர்ச்சித் திட்டங்களுக்காக 58.58 லட்சம் ரூபாய் வகை செய்யப்பட்டுள்ளது. மீன் பிடிப்புத் தொழிலை நவீன விஞ்ஞான முறையில் சீரமைக்கும் நீண்டகாலத் திட்டத்தை ஒட்டி மீனவர்களுக்கு இயந்திரப் படகுகளை வழங்கி வருகிறோம். வரும் ஆண்டில், 100 படகுகள் வழங்குவதற்காக சுமார் 25 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். ராயபுரத்தில் படகு கட்டும் தொழிற்சாலை விரைவில் செயல்படத் தொடங்கும் என எதிர்ப்பார்ப்பதால், குறிப்பிட்ட அளவிற்குப் படகுகள் வழங்குவது சாத்தியமாகுமென நினைக்கிறோம். தவிர மூன்று லட்சம் ரூபாய் மதிப்புள்ள நைலான் வலையும் மீனவர்களுக்கு வழங்க உத்தேசித்துள்ளோம். இக் கயிறு உற்பத்தி இப்பொழுது நம் நாட்டிலேயே துவங்கியிருப்பதால், இத்திட்டத்தை நிறை வேற்றுவதில் அந்நியச் செலாவணி இனித் தடையாக இராது. மீன் பிடிப்பதற்கான விசைப் படகுகளை உற்பத்திசெய்வதோடு இந்தப் படகுகளைத் தனியாக நங்கூரம் போட்டு நிறுத்தி வைப்பதற்கான வசதிகளையும் நாம் அமைத்துத் தர வேண்டும். இந் நோக்கத்தோடுதான் மீன் பிடித்துறைமுகங்கள் கட்டும் திட்டம் ஒன்றையும் நாம் மேற்கொண்டிருக்கிறோம். கடலூர் மீன் பிடித் துறைமுக வேலை இப்போது பெரும்பாலும் முடிவுபெற்று விட்டது. நாகைப்பட்டினம் மீன் பிடித் துறைமுகம் சம்பந்தமான வேலை அடுத்த நிதி ஆண்டில் பூர்த்தியாகிவிடும். நமது நாட்டில் மீன்வள அபிவிருத்திக்காக நார்வே நாட்டினர் உதவி வருகின்ற திட்டம் நம் மாநிலத்திற்கும் விஸ்தரிக்கப்படும் என்பதை அறிய இச் சபை மகிழ்ச்சியடையும் என்று நம்புகிறேன். இந்தத் திட்டத்தின்கீழ் படகு கட்டும் துறை ஒன்றை நிறுவுவதற்கான உதவியை தாம்

1st March 1963]

பெறலாம் என நினைக்கிறோம். மேலும், மரைன் டீசல் எஞ்சின் களும், உபகரணங்களும், குளிர்ப் பதன இயந்திரங்களும் நமக்குக் கிட்டும் எனவும் எதிர்பார்க்கிறோம்.

**கூட்டுறவு**

19. கிராம அளவில் உற்பத்தியைப் பெருக்குவதற்கான நமது பல்வேறு திட்டங்களுக்கும் அடிப்படைத் தேவை கடன் வசதி யாகும். கிராம மக்களுக்கு உரிய காலத்தில் நியாய வட்டிக்குக் கடன் வசதி கிடைக்கும்படி நாம் ஏற்பாடு செய்யவேண்டும். அடுத்த ஆண்டு பட்ஜெட்டில் விவசாயிகளுக்கு தக்காவிக் கடன்கள் கொடுப்பதற்காக இரண்டு கோடி ரூபாய் ஒதுக்கி யுள்ளோம். இது தவிர, உர வகைகள் வாங்குவதற்காக குறுகிய காலக்கடன்கள் கொடுப்பதற்காகவும் அறுபது லட்சம் ரூபாய் வகை செய்துள்ளோம். இருப்பினும், கூட்டுறவுத் துறையின் மூலம் கடன் வசதிகளைப் பெருக்கிக் கொடுப்பதுதான் அரசாங்கத்தின் கொள்கையாகும். 1963-64-ம் ஆண்டு இறுதிக்குள் கிராம மக்களில் 80 சத வீதத்தினர் கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினர்களாகி விடுவார்கள் என எதிர்பார்க் கிறோம். இந்தச் சங்கங்கள் மூலம் விவசாயிகளுக்குப் பற்பல வகைகளில் தரப்படும் கடன் அளவு நடப்பு ஆண்டில் 34 கோடி ரூபாயாக இருப்பது, அடுத்த ஆண்டில் 40 கோடி ரூபாயாக உயரும். இப்பொழுது 103 அபிவிருத்தி வட்டாரங்களில் மாத்திரம் அமுலில் இருக்கும் முழுப் பண உதவித் திட்டம் மேலும் 70 வட்டாரங்களுக்கு வருகிற ஆண்டில் விஸ்தரிக்கப்படும். கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து நிலத்தை ஈடு காட்டக்கூடிய நிலமுள்ள விவசாயிகளுக்கு மாத்திரமல்லாமல், விவசாய உற்பத்தி யில் ஈடுபட்டுள்ள எல்லோருக்குமே படிப்படியாகக் கடன் வசதி கிட்டும்படியாக நாம் செய்யவேண்டும். அங்ஙனம் பரவலாகக் கடன் வழங்குவதில் இருக்கின்ற நஷ்ட வாய்ப்புக்களை எதிர் நோக்கிக் கூட்டுறவுப் பிரதம சங்கங்களுக்கும் மத்திய பாங்கு களுக்கும் உத்தரவாதம் அளிக்கின்ற வகையில் அவைகளின் வசூலாகாக் கடன் விசேஷ க்ஷேம நிதிக்கு 22 லட்சம் ரூபாய் உதவித் தொகையாகக் கொடுப்பதற்கு சபைமுன் உள்ள பட்ஜெட்டில் நிதி ஒதுக்கியிருக்கிறோம்.

**பயன்படுத்துவோர் கூட்டுறவு சங்கங்கள்**

20. தற்போதைய சூழ்நிலையில் இன்றியமையாத பண்டங்களின் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதில் கூட்டுறவுச் சங்கங்கள் உதவக்கூடும் என்பதை அரசாங்கம் உணர்ந்திருக்கிறது. எனவே, ஒரு லட்சம் மக்கட் தொகைக்கு மேற்பட்ட எல்லா நகரங்களிலும் பயன்படுத்துவோர் கூட்டுறவுச் சங்கங்களை விரிவாக ஏற்படுத்தும் திட்டத்தை அரசாங்கம் துவங்கியிருக்கிறது. இந்தக் கூட்டுறவுச் சங்கங்கள் மாவட்டச் சங்கங்களுடன் இணைக்கப்பட்டுள்ளன. இச் சங்கங்கள் மொத்தமாகக் கொள்முதல் செய்வதன்மூலம் பண்டங் களை நியாயமான விலைக்கு வாங்கி விநியோகம் செய்ய முடியும். இந்தக் கூட்டுறவுச் சங்கங்கள் அனைத்திற்கும் அரசாங்கம் பங்கு மூலதனம், தொழில் மூலதனம் இவற்றின் நிமித்தமாக உதவித்

தொகை கொடுப்பதுடன், சங்கங்களின் நிர்வாகச் செலவுகளுக்காகவும் மானியம் வழங்கி இருக்கிறது. இத் திட்டத்திற்காகும் செலவின் பெரும் பகுதியை மத்திய அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கும், மலைத் தோட்டங்களில் வேலை செய்யும் தோட்டத் தொழிலாளர்களுக்கும் நன்மை பயக்கும் வகையில் 150 பயன்படுத்துவோர் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்துவதற்கான ஒரு திட்டத்துக்கும் அரசாங்கம் அனுமதி வழங்கியிருக்கிறது.

### தொழில் வளர்ச்சி—தனியார் துறை

21. தொழில் துறையில் புதிய தொழில்களை ஆரம்பிப்பதில் அரசாங்கம் தனியார் துறைக்கு உதவி புரியும் நடைமுறை சாத்தியமான கொள்கையைப் பின்பற்றி வருகிறது. தனியார் துறைக்கு இத்தகைய உதவியை, சென்னைத் தொழில் முதலீடு கார்ப்பொரேஷன் மூலம் கொடுத்து வருகிறோம். நீண்டகாலக் கடன்கள் மூலமும் பங்கு மூலதன வெளியீடுகளுக்கு உத்தரவாதம் அளிப்பதன் மூலமும் நம் மாநிலத்தில் புதிய தொழில்களை நிறுவுவதில் இந்தக் கார்ப்பொரேஷன் உதவி வருகிறது. 1962-ம் ஆண்டில் பலவித தொழில்களுக்குமாக 3 கோடியே 16 லட்சம் ரூபாய் அளவிற்குக் கடன்கள் வழங்கியுள்ளது. தனியார் துறையிலுள்ள பல தொழிலதிபர்களும் தங்களுக்கு அளிக்கப்பட்ட லைசென்சுகளின் அடிப்படையில் புதிய தொழில்களை உருவாக்குவதில் ஊக்கம் காட்டி வந்துள்ளனர். சேலம் மாவட்டத்தில் கலவை உருக்குத் தொழிற்சாலை (Alloy Steel Plant) ஒன்று தனியார் துறையில் விரைவில் உற்பத்தி தொடங்குமென எதிர்பார்க்கிறோம். சர்க்கரை ஆலைக்கு வேண்டிய இயந்திரங்களைத் தயாரிப்பதற்காக இரண்டு தொழிற்சாலைகளுக்கு லைசென்ஸ் வழங்கப்பட்டுள்ளது. ரசாயனத் தொழில் துறையில் சோடாக் காரம், மற்ற ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்கின்ற தாரங்கதாரா ஸ்தாபனத்தாரும், மேட்டூர் கெமிக்கல்ஸ் ஸ்தாபனத்தாரும் தங்கள் உற்பத்தி அளவைப் பெருக்க ஏற்பாடுகள் செய்து வருகின்றனர். உரத் தொழிற்சாலைகளைப் பொறுத்தவரையில், எண்ணூரிலுள்ள தொழிற்சாலை 1962 ஆகஸ்டில் சூப்பர்பாஸ்பேட் உற்பத்தி செய்யத் தொடங்கிற்று. கடலூரில் அமைந்துள்ள மற்றொரு தொழிற்சாலை விரைவில் உற்பத்தி செய்யத் தொடங்கும், கோவையிலுள்ள மூன்றாவது தொழிற்சாலை ஜூலை மாதத்தில் செயல்படத் தொடங்கலாம் என எதிர்பார்க்கப்படுகிறது. இவற்றைத் தவிர, பாரி ஸ்தாபனத்தாரின் தொழிற்சாலையிலும் அமோனியம் பாஸ்பேட் உற்பத்தி ஏற்கெனவே தொடங்கியுள்ளது.

22. சமீப ஆண்டுகளில் மாநில அரசாங்கம் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளை அமைப்பதில் பெருமளவு உதவி அளித்து வந்துள்ளது. இவற்றுள் அரசாங்கத்தின் உதவி பெற்றுள்ள சேலம் கூட்டுறவுச் சர்க்கரை ஆலை ஆகஸ்ட் மாதத்திற்குள் பூர்த்தியாகி உற்பத்தியைத் தொடங்கும் என நம்புகிறோம். கள்ளக்குறிச்சியிலும், சமயநல்லூரிலும் அமையவிருக்கும் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளுக்கு நடப்பு நிதி ஆண்டில் பங்கு மூலதன வகையில் நம் உதவி

அளித்திருக்கிறோம். வருகிற ஆண்டு மற்ற சர்க்கரை ஆலைகளில் பங்கு கொள்வதற்கென 10 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறோம். தனியார் துறையில் உருவாகி வரும் மற்ற பெரிய தொழிற்சாலைகளில், சேஷசாயி ஸ்தாபனத்தாரின் காகிதத் தொழிற்சாலை உற்பத்தியைத் தொடங்கி விட்டது. சேலம் ஜில்லாவில் சங்கரிதுருகத்தில் நிறுவப்பட்டுவரும் சிமெண்டு தொழிற்சாலையும் வருகிற ஆண்டில் செயல்பட ஆரம்பிக்கும். கரூருக்கருகில் மற்றொரு சிமெண்டு தொழிற்சாலையை ஏற்படுத்துவதற்கும் அனுமதி வழங்கியிருக்கிறோம். கோவை மாவட்டத்திலுள்ள தென்னிந்திய விஸ்கோஸ் ஸ்தாபனத்தாரின் ரயான் தொழிற்சாலை முழு அளவில் உற்பத்தி செய்து வருகிறது. மேலும் அதன் உற்பத்தித் திறனை அதிகரிப்பதற்கான நடவடிக்கைகளை அது மேற்கொண்டுள்ளது.

### தொழில் வளர்ச்சி—பொதுத்துறை

23. பொதுத் துறையில் உள்ள பற்பல பெரிய தொழில் திட்டங்களும் நடப்பு ஆண்டில் கணிசமாக முன்னேறி இருக்கின்றன. இவற்றுள் முக்கியமானது நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டமாகும். தென் ஆற்காடு ஜில்லாவில் விரிவாகக் காணப்படும் பழுப்பு நிலக்கரிப் படிவங்களை வெட்டியெடுத்துப் பன்முறையிலும் பயன்படுத்துவது இத் திட்டத்தின் குறிக்கோளாகும். பழுப்பு நிலக்கரியை மற்ற வேலைகளுக்குப் பயன்படுத்துவதோடு, குறிப்பாக 250 மெகவாட் அளவிற்கு அனல் மின்சாரம் உற்பத்தி செய்வதற்கும் பயன்படுத்துவார்கள். மின்சார உற்பத்தி இரண்டாவது கட்டத்தில் 400 மெகவாட் அளவிற்கு உயரும். ரஷியர்களின் உதவியுடன் உருவாகிவரும் இந்த அனல் மின்சார நிலையத்தின் முதல் யூனிட் கடந்த ஆகஸ்ட் மாதம் செயல்படத் தொடங்கி டிசம்பர் மாதம் முடிய 1 கோடியே 42 லட்சம் யூனிட் அளவிற்குக் கூடுதல் மின்சாரத்தை நம் மாநில மின் இணைப்பிற்கு வழங்கியுள்ளது. இதன் இரண்டாவது யூனிட் ஜனவரி மாதம் 23-ம் தேதி மின்சார உற்பத்தியைத் தொடங்கியது. மூன்றாவது, நான்காவது யூனிட்டுகளை அமைக்கும் வேலையும் விரைவாக முன்னேறி வருகிறது. இத்தாலிய நாட்டினரின் உதவியுடன் நிறுவப்பட்டு வரும் உரத் தொழிற்சாலையைப் பொறுத்தவரையில், சிவில் வேலைகள் நடைபெற்று வருகின்றன. இத் தொழிற்சாலையின் முக்கியமான இயந்திரங்களை நிறுவும் வேலை ஏப்ரல் மாதத்தில் துவங்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. சுட்ட அச்சுக்கரி உற்பத்தித் தொழிற்சாலையோடு இணைந்த சிவில் வேலைகளும் பற்பல நிலைகளில் நடந்தேறி வருகின்றன.

24. நெய்வேலி பழுப்பு நிலக்கரியையும், சேலம் இரும்புக் கனியையும் பயன்படுத்தி உருக்காலை ஒன்றை நம் மாநிலத்தில் ஏற்படுத்துவதற்கான சாத்தியக்கூறுகளை ஆராய்ந்து வந்திருக்கிறோம். இது சம்பந்தமாக ஜெர்மனியிலும் நார்வேயிலும் நடத்திய விரிவான சோதனைகள் இத் திட்டம் சாத்தியமானது என்கிற நம்பிக்கையை ஊட்டியிருக்கின்றன. இச் சோதனைகளின் அடிப்படையில் 5 லட்சம் டன் உருக்கு ஆலை ஒன்றை நிறுவுவதற்கான

விரிவான திட்ட அறிக்கையைத் தயாரிக்கும் முயற்சியை இந்திய அரசாங்கம் மேற்கொண்டிருக்கிறது. திட்ட அறிக்கையைத் தயாரிக்கும் பொறுப்பு தஸ்தூர் அண்டு கம்பெனி என்ற ஸ்தா பனத்தாரிடம் ஒப்புவிக்கப்பட்டுள்ளது. திட்ட அறிக்கை இவ் வாண்டின் பிற்பகுதியில் இந்திய அரசாங்கத்திற்குச் சமர்ப்பிக்கப் படும் என நம்புகிறோம். இந்தப் பணியை நிறைவேற்றுவதில் இந்த ஸ்தாபனத்திற்கு மாநில அரசாங்கம் எல்லா உதவியையும் கொடுத்து வருகிறது.

25. மத்திய அரசாங்கம் நமது மாநிலத்தில் துவங்கியுள்ள மற்ற கனரகத் தொழில்களின் முன்னேற்றத்தைப் பற்றியும் சுருக்க மாகக் குறிப்பிட விரும்புகிறேன். கிண்டியில் இத்தாலிய நாட்டினரின் உதவியுடன் உருவாக்கியுள்ள டெலி பிரிண்டர் தொழிற்சாலை, டெலி பிரிண்டர் இயந்திர பாகங்களை இணைப்பதில் இப்போது ஈடுபட்டுள்ளது. இந்த இயந்திர பாகங்களில் சுமார் பாதி அளவிற்கு இப்போது இங்கேயே தயாரிக்கப்பட்டு வருகிறது. மேலும் அதிக அளவிற்கு இங்கேயே உற்பத்தி செய்வதற்கான முயற்சிகளும் தொடர்ந்து நடைபெறும்.

26. நீலகிரியில் பிரெஞ்சு உதவியுடன் உருவாகி வரும் கச்சா படச் சுருள் தொழிற்சாலை அமைப்பிலும் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இத் திட்டத்திற்கான முதலீடு சுமார் 7½ கோடி ரூபாய். அதில் 3½ கோடிக்குமேல் இயந்திரங் களின் மதிப்பாகும். இத் திட்டத்திற்கான சிவில் வேலைகள் நடந்து வருகின்றன. இயந்திரங்களைப் பொறுத்த வரையில், 1 கோடியே 23 லட்சம் ரூபாய் மதிப்புள்ள சாதனங்களை பிரான்சிலிருந்து கப்ப லேற்றி அனுப்பியிருக்கிறார்கள்.

27. மத்திய அரசாங்கம் மேற்கொண்டுள்ள மற்றொரு தொழில் திட்டம் திருச்சிக்கு அருகில் அமையவிருக்கும் கனரகக் கொதி கலன் தொழிற்சாலையாகும். இத் தொழிற்சாலையின் தேவைக்காக 1,750 ஏக்கர் பட்டா நிலங்களையும், 2,400 ஏக்கர் புறம்போக்கு நிலங்களையும் ஆர்ஜிதம் செய்து கொடுத்திருக்கிறோம். தொழிற் சாலை கட்டுவதற்கான டெண்டர்கள் அநேகமாய் முடிவு செய்யப் பட்டுவிட்டன. இயந்திரங்களும் சில மாதங்களில் செக்கோஸ் லவேக்கியாவிலிருந்து வரும் என எதிர்பார்க்கிறோம்.

28. ஆவடிக்கருகில் பாதுகாப்புச் சாதனத் தொழிற்சாலைத் திட்டம் உருவாவதற்கு மாநில அரசாங்கம் எல்லா உதவியையும் அளித்து வருகிறது என்பதை அறிய இச் சபையினர் மகிழ்ச்சி அடைவர். நாளடைவில் இந்தத் திட்டத்திற்கு தினந்தோறும் சுமார் 30 லட்சம் காலன் தண்ணீர் தேவைப்படும். சென்னையின் சுற்றுப்புறங்களில் தோன்றியுள்ள மற்ற தொழிற் சாலைகளின் தண்ணீர்த் தேவைகளும் வளர்ந்து கொண்டே போகின்றன. ஆகவே, சென்னை நகர மக்களுக்குத் தேவைப்படும் தண்ணீர் அளவுக்குக் குந்தகமில்லாமல், இந்தத் தொழிற்சாலையின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக அரசாங்கம் நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. சோழவரம் ஏரி, புழலேரி இவற்றின்கீழ் 7,500 ஏக்கர் நஞ்சை நிலங்களை ஆர்ஜிதம் செய்வதன்மூலம் மிகுதிப் படும் தண்ணீரை ஆவடி பாதுகாப்புச் சாதனத் தொழில் திட்டத்

1st March 1963]

திற்கும் மற்றும் பல தொழில் திட்டங்களுக்கும் வழங்க அரசாங்கம் ஏற்பாடு செய்துள்ளது. இந்த நில ஆர்ஜிதத் திட்டத்திற்காக சபைமுன் உள்ள பட்ஜெட்டில் 1 கோடியே 75 லட்சம் ரூபாய் வகை செய்யப்பட்டுள்ளது. ஆவடி பாதுகாப்புச் சாதனத் தொழிற் சாலைக்கு தண்ணீர் கொண்டு செல்வதற்கான திட்டத்திற்காக மேலும் 58 லட்சம் ரூபாயும் பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்டுள்ளது. சென்னை நகருக்கருகில் எண்ணூரில் மரைன் டீசல் எஞ்சின்களைத் தயாரிப்பதற்கான ஒரு தொழிற்சாலையை நிறுவவும் மத்திய அரசாங்கம் முன் வந்திருக்கிறது. இத் திட்டத்திற்காக மாநில அரசாங்கம் 70 ஏக்கர் நிலத்தை ஆர்ஜிதம் செய்துள்ளது. தவிர, மாநில அரசாங்கத்திற்கும் தென்பிராந்திய ரயில்வேக்கும் சொந்த மான 110 ஏக்கர் நிலங்களையும் இந்தத் திட்டத்திற்காகக் கொடுக்க வேண்டியிருக்கிறது.

மின்சார அபிவிருத்தி.

29. தற்காப்புத் தேவைகளையொட்டி இன்றைய நிலையில் நாம் தொழில் துறையில் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்றால், அது பெரும்பாலும் மின்சார வசதியைப் பொறுத்திருக்கும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்தம் 201 கோடி ரூபாய் முதலீட்டில் 100 கோடி ரூபாய்க்குச் சற்று அதிகமாகவே மின்சார அபிவிருத்திக்கென ஒதுக்கியுள்ளோம். கடந்த இரு திட்டங்களிலுமாக நமது மின்சார இணைப்பின் உற்பத்தித் திறன் பெருமளவிற்கு உயர்ந்திருந்த போதிலும், மின்சாரத் தேவையானது அதையும் மிஞ்சி விட்டது. ஆகவே மின்சாரத் திட்டங்களைத் துரிதமாக நிறைவேற்ற ஏற்பாடுகள் செய்துள்ளோம். 1962-63-ல் மின்சார அபிவிருத்திக்காக 18½ கோடி ரூபாய் முதலில் ஒதுக்கி யிருந்தோம். அது இப்பொழுது 19 கோடியே 34 லட்சம் ரூபாய் அளவிற்கு உயர்ந்திருக்கிறது. வருகின்ற ஆண்டில் இதை மேலும் உயர்த்தி மின்சார உற்பத்தித் திட்டங்களுக்காக 20 கோடியே 75 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். 240 மெகவாட் உற்பத்தித் திறனுள்ள குந்தா இறுதி நிலைத் திட்டத்திற்கான சிவில் வேலைகள் நிர்ணயித்துள்ளபடி நடந்து வருகின்றன. 1964-65-ல் இத் திட்டம் செயல்படத் தொடங்கும். மேட்டூர் டன்னல் திட்டம் முதல் நிலை சம்பந்தமான கட்டிட வேலைகள் பெரும்பாலும் பூர்த்தியடை கின்றன. 100 மெகவாட் உற்பத்தித் திறனுள்ள இந்தத் திட்டம் மேட்டூர் அணையிலிருந்து பாசனத்திற்காக விடப்படுகிற தண்ணீரை மின்சார உற்பத்திக்குப் பயன்படுத்துகிற வகையில் அமைந்திருக்கிறது. இத் திட்டத்திற்கு வேண்டிய இயந்திரங்களும் சாதனங்களும் ரஷ்யாவிலிருந்து வரத் தொடங்கிவிட்டன. 1964-ல் மின்சார உற்பத்தி துவங்குமென எதிர்பார்க்கிறோம். மேட்டூர் டன்னல் திட்டத்தின் இரண்டாம் நிலை வேலைகளுக்கும் திட்டக் கமிஷன் சமீபத்தில் அனுமதி அளித்துவிட்டது என்பதை நான் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இத்திட்டத்தின்-மூலம் 100 மெகவாட் மின்சாரத் திறன் நமது மின் இணைப்பிற்குக் கிட்டும். இப் புதிய திட்டத்திற்குத் தேவையான இயந்திரங்களையும் சாதனங்களையும் ரஷ்யாவிலிருந்து தருவிப்பதற்கான நடவடிக் கைகளும் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. பரம்பிக்குளம்-ஆளி

யாறு நீர் மின்சார வேலைத் திட்டங்களும் வேகமாக நடைபெற்று வருகின்றன. சர்க்கார்பதி, சோலையாறு மின்சார நிலையங்களுக்கு வேண்டிய மின் உற்பத்தி இயந்திரங்களைத் தருவிக்க ஏற்கெனவே உத்தரவுகள் இடப்பட்டிருக்கின்றன. நம் மாநிலத்தில் மின்சார உபயோகம் முதல ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் தலைககு 12 யூனிட் அளவாக மாத்திரம் இருந்தது. அது இப்பொழுது 70 யூனிட் அளவிற்கு உயர்ந்திருக்கிறது. கிராம மின்சார வசதித் துறையிலும் நாம் முன்போலவே முன்னணியில் நிற்கிறோம். 1963-64-ல் கிராம மின்சார வசதித் திட்டத்திற்கென்று 5 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். இந்த ஆண்டு ஜனவரி மாதம் வரை 14 ஆயிரத்திற்கும் மேற்பட்ட நகரங்கள், கிராமங்களுக்கு மின்சார வசதி செய்து கொடுத்திருக்கிறோம். ஒரு லட்சத்து ஐம்பத் தெட்டாயிரம் பம்பு செட்டுகளுக்கும் மின்சாரம் வழங்கியிருக் கிறோம்.

30. நான் முன்பு கூறியது போலவே, அண்மையில் நெய்வேலியில் துவங்கிய இரண்டு அனல் மின்சார யூனிட்டுகள் உட்பட நமது மின்சார உற்பத்தித் திறன் அதிகரித்திருந்தபோதிலும், மின்சாரத் தேவை மேலும் அதிகமாக உயர்ந்திருக்கின்றது. குறிப்பாக, இனி வரும் மாதங்களில் நீர்த்தேக்கங்களில் தண்ணீர் மட்ட நிலை அவ்வளவு திருப்திகரமாக இல்லாததால், மின்சாரப் பற்றுக்குறை நிலையை நாம் கூர்ந்து கவனிக்க வேண்டி வரும். மேட்டூர் டன்னல் திட்டம் சம்பந்தமான வேலையை நாம் பூர்த்தி செய்ய வேண்டி யிருப்பதால், மேட்டூர் அணையில் நீர் மட்ட அளவினைக் குறைத் திருக்கிறோம். வருங் கோடைக் காலத்தில் மேட்டூர் மின்சார நிலையம் செயல்படுவது தடைப்படலாம். ஆகவே, கிடைக்கும் மின்சாரத்தை பாதுகாப்பு முக்கியத்துவம் வாய்ந்த தொழில் களுக்காகச் சேமிக்கும் பொருட்டு, அவசியமில்லாத காரியங் களுக்கு மின்சாரத்தைப் பயன்படுத்துவதில் சில கட்டுப்பாடுகளை அரசாங்கம் விதித்துள்ளது.

31. நம் மாநிலத்தில் புதிய மின்சாரத் திட்டங்களை ஏற்படுத்து வதற்கான சாத்தியக்கூறுகளை அரசாங்கம் தொடர்ந்து ஆராய்ந்து வருகிறது. கன்னியாகுமரி மாவட்டத்தில் கோடையாறு நீர் மின்சாரத் திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு திட்டக் கமிஷனின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்பட்டுள்ளது. இத் திட்டத்தின் மூலம் 75 ஆயிரம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும். இத் திட்டத்திற்கு 7 கோடியே 80 லட்சம் ரூபாய் செலவாகுமென மதிப் பிடப்படுகிறது. மூன்றாவது திட்டக் காலத்திலேயே இந்த வேலைத் திட்டத்தை எடுத்துக்கொள்ள அரசாங்கம் முயற்சி செய்யும். இப் பொழுது பரிசீலனையில் உள்ள மற்றொரு பெரிய நீர் மின்சாரத் திட்டம் காவிரியாற்றில் அமையும் ஹோகனேக்கல் திட்டமாகும். ஐம்பத்தி எட்டு கோடி ரூபாய் செலவாகும் இத் திட்டம் 800 மெகவாட் உற்பத்தித் திறன் உடையது. மைசூர் அரசாங்கத்தின் ஒப்புதலைப் பெற்றே இந்தத் திட்டத்தைப் பரிசீலனை செய்து நிறை வேற்றவேண்டியிருக்கிறது. மைசூர் அரசாங்கத்தின் ஒப்புதல்

1st March 1963]

விரைவில் கிட்டுமென நம்புகிறோம். நம் மாநிலத்தில் அவ்வப் போது மின்சாரத் தட்டு ஏற்படுவதாலும், இப்பொழுது நம் மின் இணைப்பு நீர் மின்சாரத் திட்டங்களையே சார்ந்திருக்கும் நிலையைச் சீர்படுத்தவும் நமது அரசாங்கம் தமிழ்நாட்டில் அணு மின்சார நிலையம் ஒன்றை நிறுவும்படி இந்திய அரசாங்கத்தை வற்புறுத்தி வந்திருக்கிறது. இதன் காரணமாக, நமது நாட்டின் மூன்றாவது அணு மின்சார நிலையம் தமிழ்நாட்டில் மகாபலிபுரத்திற்கு அருகில் உள்ள ஓர் இடத்தில் அமைக்கப்படுமென எதிர்பார்க்கலாம்.

### தொழிற் கல்வி

32. பொதுமக்களின் தேவைகளையும் தற்காப்புத் தேவைகளையும் நமது பற்பல தொழில்கள் பூர்த்தி செய்ய வேண்டுமென்றால், அதற்குத் தொழில் நுணுக்கப் பயிற்சி பெற்றவர்கள் ஏராளமாகத் தேவைப்படுவர். நாட்டின் தற்போதைய அவசர கால நிலையினால் நமது தொழிற் கல்வித் திட்டங்களைத் துரிதப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. தொழிற் கல்விக்கான வசதிகளைப் பெருக்குவதில் நம் மாநிலத்தில் ஏற்கனவே நல்ல முன்னேற்றம் அடைந்திருக்கிறோம். முதல் திட்டக் காலத் துவக்கத்தில் நம் மாநிலப் பொறியியல் கல்லூரிகளில் ஆண்டுதோறும் சேர்த்துக்கொண்ட மாணவர்களின் தொகை 437-ஆக இருந்தது. இது இப்போது 1,157-ஆக உயர்ந்துள்ளது. பாதுகாப்புப் படைகள், பாதுகாப்பு முக்கியத்துவம் வாய்ந்த தொழில்கள் இவற்றின் தேவைகளை அனுசரித்து இதை 1,157-லிருந்து 1,482-ஆக உயர்த்துவதற்கான திட்டங்கள் ஆலோசனையில் உள்ளன. பி.எஸ்.ஸி. மாணவர்களுக்குப் பொறியியல் கல்லூரிகளில் மூன்றாண்டுப் பட்டப் படிப்பிற்கான வாய்ப்பை அளிப்பதன்மூலம் நாம் மேற்குறிப்பிட்ட அளவிற்கு பொறியியல் கல்லூரிகளில் அதிக மாணவர்களைச் சேர்த்துக் கொள்ள முடியும். பொறியியல் டிப்ளோமா பெற்றவர்கள் பட்டம் பெற விரும்பினால், அவர்களுக்குப் பகுதி நேர வகுப்புகள் நடத்தவும் அரசாங்கம் ஆலோசித்து வருகிறது. சேலத்தில் புதிதாக ஒரு பொறியியல் கல்லூரியை நிறுவுவதென அரசாங்கம் முடிவு செய்துள்ளதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இக் கல்லூரியை ஏற்படுத்துவதற்கான இடம் தேர்ந்தெடுக்கப்பட்டு நில ஆர்ஜித நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. 1963-64-ல் திருச்சிராப்பள்ளியில் ஒரு பிராந்தியப் பொறியியல் கல்லூரியை அமைப்பதற்கான முயற்சிகளும் துரிதமாக முன்னேறி வருகின்றன. சுமார் 400 ஏக்கர் நிலங்கள் ஆர்ஜிதம் செய்யப்பட்டு கட்டட வேலைகளுக்கென விசேஷ ஊழியர்களும், நியமிக்கப்பட்டுள்ளனர். இக் கல்லூரியில் முதற்கண் 120 மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப் படுவார்கள். ஆனால், சாத்தியமானவுடன் மாணவர்களின் எண்ணிக்கை 250 வரை உயர்த்தப்படும்.

33. இதைப்போலவே, டிப்ளோமா தொழிற் கல்விக்கான வசதிகளும் அதிகரித்துள்ளன. முதல் திட்டத் தொடக்கத்தில் 9 பாலிடெக்னிக்குகள் மட்டுமே இருந்தன. ஆனால், இப்பொழுது 24 பாலிடெக்னிக்குகள் உள்ளன. இவற்றில் 2,910 மாணவர்கள் வரை

[1st March 1963

ஆண்டுதோறும் சேர்த்துக் கொள்ளமுடியும். 1963-64-ல் மேலும் இரு புதிய பாலிடெக்னிக்குகளை ஏற்படுத்த உத்தேசித்துள்ளோம். அவற்றுள் ஒன்று திருச்சிராப்பள்ளியில் அமையும். பாலிடெக்னிக்குகளில் மாணவர்களை இன்னும் கூடுதலாகச் சேர்த்துக்கொள்வதற்கான சாத்தியக்கூறுகளையும் அரசாங்கம் ஆராய்ந்து வருகிறது. வரும் ஆண்டில் மகளிர் பாலிடெக்னிக்குகள் இரண்டும் புதிதாக நிறுவப்படும். 1963-64 பட்ஜெட்டில் மகளிர் பாலிடெக்னிக்குகளுக்கென சுமார் 12½ லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. கிண்டியிலுள்ள மத்திய பாலிடெக்னிக்கில் ரசாயனத் தொழில் நுட்பப் படிப்பிற்கான டிப்ளோமா வகுப்பு ஒன்று 1963-64-ல் தொடங்கும். வளர்ந்துவரும் நமது ரசாயனத் தொழில்களுக்குத் தேவைப்படும் பணியாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதே இதன் நோக்கமாகும். தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்களுக்கு நன்மை பயக்குவதற்கான வகுப்புகள் நடத்தும் திட்டங்களையும் அரசாங்கம் ஆராய்ந்து வருகிறது.

### சிறுரகத் தொழில்கள்.

34. தொழில் வளர்ச்சியையொட்டி நமக்கு அதிகம் திறனுள்ள தொழிலாளர்கள் தேவைப்படுவர். அத்தகைய கைத்திறனுள்ள தொழிலாளர்களுக்குப் பயிற்சி கொடுப்பதற்கான நிலையங்களையும் நிறுவியுள்ளோம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத் துவக்கத்தில் 3,368 தொழிலாளர்களுக்குத்தான் பயிற்சிகள் அளிக்க வசதிகள் இருந்தன. புதிய பயிற்சி நிலையங்களை நிறுவியதன்மூலம் மேற்கொண்டு இரண்டு ஆயிரம் தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிக்கும் வாய்ப்புக்களை உருவாக்கியிருக்கிறோம். இப்பொழுது நம் மாநிலத்தில் 32 தொழிற் பயிற்சி நிலையங்கள் **Industrial Training Institute** உள்ளன. 1963 ஆகஸ்ட் மாதத்திலிருந்து உளுந்தூர்பேட்டையில் ஒன்றும், திருவண்ணாமலையில் மற்றொன்றுமாக இரண்டு நிலையங்களை நிறுவவதென உத்தேசித்துள்ளோம். தவிர, 1963-64-ம் ஆண்டு பட்ஜெட்டில் மேற்கொண்டு மூன்று தொழிற் பயிற்சி நிலையங்களை நிறுவுவதற்கு வகைவகை செய்யப்பட்டிருக்கிறது. அவற்றில் ஒன்று புதுக்கோட்டையிலும், இன்னொன்று தூத்துக்குடியிலும் அமையும். தொழிற்பயிற்சி நிலையங்களிலும் பொறியியல் கல்லூரிகளிலும் பாதுகாப்புப் படைகளுக்குத் தேவைப்படும் தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கான குறுகிய கால வகுப்புக்களையும் துவக்கியிருக்கிறோம்.

35. கனரகத் தொழில்கள்மூலமாக மாத்திரம் நாம் வேலை வாய்ப்புக்களை அதிகம் பெருக்க முடியாது. கனரகத் தொழில்களோடு இணைந்து பலதரப்பட்ட சிறுரகத் தொழில்களையும் அமைக்கவேண்டுமென்ற படிப்பினையைத்தான் ஜப்பான் முதலிய நாடுகளிலிருந்து நாம் அறிகிறோம். பாதுகாப்புப் படைகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலும் சிறுரகத் தொழில்களுக்குப் பெரும் பங்கு உண்டு. இம் மாதிரி, சிறுரகத் தொழில்கள் பரவலாக நமது மாநிலத்தில் ஏற்பட உதவும் வகையில் அரசாங்கம் மாதிரி உற்பத்திப் பயிற்சி நிலையங்கள் பலவற்றையும் சிறுரகத் தொழில்களுக்குத் தேவையான இடவசதி, மின்சார வசதி,

**1st March 1963]**

தண்ணீர் வசதி போன்ற வசதிகள் ஒருங்கமைந்த தொழிற் பேட்டைகளையும் ஏற்படுத்துவதன்மூலம் ஊக்கம் அளித்து வந்திருக்கிறது. மூன்றும் திட்டக் காலத்தில் ஏற்படுத்துவதாக உத்தேசித்துள்ள பல தொழிற்பேட்டைகளில் தேனீ, விருத்தாசலம், காரைக்குடி, புதுக்கோட்டை, திண்டுக்கல், அம்பத்தூர் ஆகிய இடங்களில் கட்டிட வேலை இப்போது நடைபெற்று வருகிறது. கோவில்பட்டியிலும், கிருஷ்ணகிரியிலும் நில ஆர்ஜித வேலைகள் முடிவடைந்து விட்டன. 1962-63-ல் இத் தொழிற்பேட்டைகளில் 41 தொழிற்கூடங்கள் கட்டும் வேலைகள் பற்பல நிலைகளில் உள்ளன. 1963-64-ல் கூடுதலாக 100 கூடங்கள் கட்டப்படும். வரும் நிதி ஆண்டில் 3 தொழிற்பேட்டைகளை நிறுவ உத்தேசித்துள்ளோம். இவை முறையே நாகர்கோயில், கும்பகோணம், சிவகங்கை ஆகிய இடங்களில் அமையும். தனியார் துறையில் தொழிலதிபர்களுக்கு அபிவிருத்தி செய்த மனைக்கட்டுகளை நியாயமான விலைக்கு வழங்குவதற்காக அம்பத்தூரில் சுமார் 600 ஏக்கர் நிலங்களை ஆர்ஜிதம் செய்திருக்கிறோம். இதே நிலத்தில் 70 கூடங்கள் அடங்கிய ஒரு தொழிற்பேட்டையும் அமையும். சில கூடங்கள் சம்பந்தமான கட்டிட வேலைகள் ஏற்கனவே நடந்து வருகின்றன. வேலூரிலும் தஞ்சாவூரிலும் உள்ள சைகில் இணைப்புத் தொழிற் கூடங்கள் இரண்டிலும் வேலை வெற்றிகரமாக நடந்து வருகின்றது. சைகில் பாகங்கள் சிலவற்றை இவை வருகிற ஆண்டில் உற்பத்தி செய்யத் தொடங்கும். 1963-64-ல் கிருஷ்ணகிரியிலும், தூத்துக்குடியிலும் இதுபோன்ற இன்னும் இரண்டு புதிய சைகில் இணைப்புத் தொழிற்சாலைகளை ஏற்படுத்தியிருக்கிறோம். இதற்கென பட்ஜெட்டில் நிதி ஒதுக்கமும் செய்யப்பட்டிருக்கிறது. ராஜபாளையத்திலும், கும்பகோணத்திலும் உள்ள பொதுநோக்குப் பொறியியல் தொழிற்கூடங்களை விரிவு செய்ய ஏற்பாடுகள் செய்து வருகிறோம். திருச்சியிலுள்ள விவசாயப் பண்ணைக் கருவிகள் தொழிற்சாலையையும் விரிவுபடுத்த நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம்.

36. கூட்டுறவுத் துறையிலும் தனியார் துறையிலும் இயங்கும் சிறுரகத் தொழில்களுக்கு வேண்டிய தொழில் மூலதனத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகக் கிண்டியிலுள்ள தொழிற்பேட்டையில் தொழிற் கூட்டுறவு பாங்கு ஒன்றை நிறுவியுள்ளோம். பாங்கின் பங்கு மூலதனத்திற்காக அரசாங்கம் பத்து லட்சம் ரூபாய் முதலீடு செய்திருக்கிறது. பாங்க் நடப்பு ஆண்டில் செயல்படத் தொடங்கி, சில சிறு ரகத் தொழில்களுக்கு ஏற்கனவே கடன் வசதிகள் வழங்கியிருக்கிறது. பொதுமக்களிடமிருந்து பெருமளவில் டிபாசிட்டுகளைப் பெற்றுத்தான் இந்த பாங்க் தனது நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்ள முடியும். எனவே, பொது மக்களிடமிருந்து பெறும் டிபாசிட்டுகளைத் திருப்பிக் கொடுப்பதற்கான உத்தரவாதத்தை அரசாங்கம் அளித்துள்ளது.

### கைத்தறித் தொழில்

37. தொழில் அபிவிருத்தி சம்பந்தமாக அரசாங்கம் தன் கொள்கையை வகுக்கையில், கைத்தறி போன்ற ஏராளமான மக்களுக்கு வேலை வாய்ப்புக்களை அளிக்கும் குடிசைத் தொழில்களின்

நலனைப் புறக்கணித்துவிடவில்லை. கைத்தறித் தொழில் அபிவிருத்திக்காக மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் 8 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். கைத்தறித் துறையில் ஆக்க வேலைகள் திட்டப்படி நிறைவேறி வருகின்றன. 1963-64-ம் ஆண்டு பட்ஜெட் மதிப்பீடுகளில் கைத்தறித் தொழில் வளர்ச்சிக்கென 1 கோடியே 38 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். கைத்தறித் தொழிலுக்குத் தேவைப்படும் நல்ல ரக நூல் நியாய விலைக்குக் கிட்டும்படிச் செய்ய நம் மாநிலத்தில் கூட்டுறவு நூற்பு ஆலைகளை நிறுவுவதற்கு அரசாங்கம் ஊக்கமளித்து வருகிறது. அந்த ஆலைகளின் பங்கு மூலதனத்தில் அரசாங்கம் முதலீடு செய்து வருகிறது. திருநெல்வேலி, நாசரத், ஸ்ரீவில்லிபுத்தூர், சேலம் ஆகிய இடங்களிலுள்ள நான்கு கூட்டுறவு நூற்பு ஆலைகளில் அரசாங்கம் இதுவரை சுமார் 49 லட்சம் ரூபாய் முதலீடு செய்துள்ளது. நடப்பு ஆண்டில் காஞ்சீபுரத்தில் நிறுவப்பட்டு வரும் கூட்டுறவு நூற்பு ஆலையில் 10 லட்சம் ரூபாய் முதலீடு செய்ய அரசாங்கம் அனுமதித்திருக்கிறது. இந்த நிதி ஆண்டின் இறுதிக்குள் மதுரை கூட்டுறவு நூற்பு ஆலையிலும் 10 லட்சம் ரூபாய் முதலீடு செய்யப்படும். இப்பொழுது உத்தேசித்துள்ள மற்ற கூட்டுறவு நூற்பு ஆலைகளில் பங்குத் தொகை முதலீடு செய்வதற்கென, 1963-64 பட்ஜெட் மதிப்பீடுகளில் 30 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. சமீப மாதங்களில் கைத்தறித் தொழிலில் ஓரளவிற்குத் துணித் தேக்கம் ஏற்பட்டுள்ளது. நெசவாளர்ச் சங்கங்களின் சங்கடங்களைப் போக்குகின்ற வகையில் கூடுதலாகக் கொள்முதல் செய்வதற்கென மாநிலக் கைத்தறிக் கூட்டுறவுச் சங்கத்திற்கு அரசாங்கம் தொழில் மூலதனக் கடனாக 50 லட்சம் ரூபாய் நடப்பு ஆண்டில் வழங்கியது. கைத்தறி ஜவுளி விற்பனையையும் வெகுவாக ஊக்குவதற்கென 15 நாட்களுக்கு விசேஷ ரிபேட் கொடுப்பதென முடிவு செய்து அரசாங்கம் நிதி உதவி அளித்திருக்கிறது. இந்த விசேஷ ரிபேட்டின் காரணமாக 10 லட்சம் ரூபாய் கூடுதல் செலவாகும். இப்போது ஏற்பட்டுள்ள துணித் தேக்கம் தற்காலிகமானது என்றும், நாட்டின் பாதுகாப்பு முயற்சிகள் பெருகப் பெருக மில் துணி, கைத்தறித் துணி போன்ற எல்லா வகைத் துணிகளுக்கும் தேவை அதிகமாகும் என்றும் நாம் நிச்சயமாக நம்பலாம்.

**கல்வி வளர்ச்சி**

38. நாட்டில் இப்பொழுது ஏற்பட்டுள்ள நிலைமையை மனதிற் கொண்டு நமது ஐந்தாண்டுத் திட்டத்தைத் திருத்தியமைக்கும் போது, கல்வித் திட்டங்களின் வளர்ச்சி குன்றாமல் வழிவகை செய்திருக்கிறோம். கடந்த சில ஆண்டுகளில் கல்விச் செலவு பெருமளவு அதிகரித்திருப்பது கனம் அங்கத்தினர்களுக்கு நன்றாய்த் தெரியும். நமது மாநில பட்ஜெட்டில் எல்லா அபிவிருத்தித் துறைகளைக் காட்டிலும் கல்வித் துறைக்குத்தான் இன்று நாம் அதிகம் செலவிடுகிறோம். கல்வி வளர்ச்சி சம்பந்தமாகச் சில புள்ளி விவரங்களை நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்தில், அதாவது 1955-56-ல் கல்விக்காக நாம் செய்த செலவு 10 கோடியே 82 லட்சம் ரூபாய்

1st March 1963]

ஆனால், 1963-64 பட்ஜெட்டில் நாம் கல்விக்காக ஒதுக்கியிருப்பது 27 கோடியே 58 லட்சம் ரூபாய் கல்விச் செலவை சமுதாய வளர்ச்சிக்காக நாம் செய்யும் முதலீடு எனக் கொள்ள வேண்டும். தேசீய நெருக்கடியினால் ஏற்பட்டுள்ள தற்காலிக இன்னல்கள் காரணமாக இத் துறையின் அபிவிருத்தி வேகத்தை மட்டுப் படுத்துவது சரியல்ல. இவ்வாண்டின் இறுதிக்குள் மாநிலத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் கட்டாய ஆரம்பக் கல்வி விஸ்தரிக்கப் பட்டுவிடும். நடப்பு ஆண்டில் மட்டும் 6 வயது முதல் 11 வயது வரையிலுள்ள சிறுவர் சிறுமியர் 4 லட்சம் பேர் ஏற்கெனவேயே சேர்ந்துவிட்டார்கள் என மதிப்பிடப்படுகிறது. அடுத்த ஆண்டில் மேலும் 3 லட்சம் மாணவர்கள் ஆரம்பப் பள்ளிகளில் சேர்க்கப் படுவார்கள். கட்டாயக் கல்வித் திட்டம் இத்துணை விரைவில் பரவியிருப்பதற்கான காரணங்களில் மிகவும் முக்கிய மானது, கல்வியின் பயனை இப்போது மக்கள் பரவலாக அறிந்திருப்பது ஒருபுறமிருக்க, ஆரம்பப் பள்ளிகளில் ஏழை மாணவர்களுக்கு மதிய உணவு அளிக்க ஏற்பாடு செய்திருப்பது தான். இந்தத் திட்டத்தைத் தொடர்ந்து செயலாற்றுவதற்காக 1963-64 பட்ஜெட்டில் 1 கோடியே 35 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இத் திட்டத்தின்கீழ் வழங்கப்படும் உணவின் தரத்தை உயர்த்துவதற்காக 'கேர்' (Care) ஸ்தாபனம் முன்போலவே தாராளமாக உதவி அளித்து வருகிறது என்பதை அறிய கனம் அங்கத்தினர் மகிழ்ச்சி யடைவார்கள். நடப்பு ஆண்டில் இந்த ஸ்தாபனத்தாரிடமிருந்து 1 கோடியே 5 லட்சம் பவுண்டு தானியமும், 80 லட்சம் பவுண்டு பால் பவுடரும் நமக்குக் கிட்டியிருக்கின்றன. நாமும் இந்தப் பொருள்களை வழங்கும் திட்டத்திற்கான செலவினங்களுக்கென சுமார் 13 லட்சம் ரூபாய் ஒதுக்கியுள்ளோம். ஆரம்பக் கல்வி திட்டத்தைச் சரிவர நிறைவேற்றுவதில் இப்போது பஞ்சாயத்து யூனியன்கள் முக்கிய பொறுப்பு வகிக்கின்றன. அவைகளுக்கு அரசாங்கம் பெருமளவிற்கு உதவி செய்து வருகிறது. ஆரம்பக் கல்விக்கு ஆகும் செலவின் நிமித்தம் பஞ்சாயத்து யூனியன்களுக்கு மானியமாக 11 கோடியே 13 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

### உயர்நிலைக் கல்வி.

39. ஆரம்பக் கல்விக்கான வசதிகளின் வளர்ச்சியை யொட்டி, உயர்நிலைக் கல்விக்கான வசதிகளையும் பெருக்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. குறிப்பாக, பத்தாம் வகுப்பு வரையில் ஏழை மாணவர்களுக்கெல்லாம் கல்வி இலவசம் என அரசாங்கம் கொள்கை வகுத்திருப்பதால், உயர்நிலைப் பள்ளிகளில் சேர விரும்பும் மாணவர்களின் எண்ணிக்கையும் பெருமளவு அதிகரித்துள்ளது. இந்த நிலையை அரசாங்கம் நல்ல முறையில் சமாளித்திருக்கின்றது என்பது, கடந்த இரண்டு ஆண்டுகளில் மட்டும் 480 உயர்நிலைப் பள்ளிகள் புதிதாகத் திறக்கப்பட்டுள்ளன என்பதிலிருந்தே நன்கு புலனாகும். நடப்பு ஆண்டின் திருத்த மதிப்பீடுகளில் உயர்நிலைக் கல்விக்காக ஒதுக்கியுள்ள தொகை 5 கோடியே 70 லட்சம் ரூபாய். ஆனால், அடுத்த ஆண்டு பட்ஜெட் மதிப்பீடுகளில் 6 கோடியே 52 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து உயர்நிலைக்

கல்வி வசதிகளை மேலும் பெருக்குவதற்கு அடுத்த ஆண்டு பட்ஜெட் மதிப்பீடுகளில் போதிய வாய்ப்புத் தந்திருப்பது நன்கு தெரியும். கல்லூரிக் கல்வியைப் பொறுத்தவரையில் கும்பகோணத்தில் மகளிர்க் கல்லூரி ஒன்றைப் புதிதாக நிறுவுவதற்கு சபைமுன் உள்ள பட்ஜெட்டில் நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

மருத்துவ வசதிகள்

40. அவசர கால நிலைக்கொப்ப, நமது திட்டத்தைத் திருத்தியமைக்கும்போது சமூக நலப் பணிகளில் எவற்றைக் கொள்ள வேண்டும், எவற்றை விடவேண்டும் என்று பாகு பாடு செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். அப்படியிருப்பினும் 1963-64-ல் மருத்துவம், பொதுச் சுகாதாரம் போன்ற திட்டங்களுக்காக 5 கோடியே 6 லட்சம் ரூபாய் வகை செய்திருக்கிறோம். இந்த திட்டங்களை மேலும் விஸ்தரிக்க இயலாமைக்கு முக்கிய காரணம் நமக்குப் போதிய அளவிற்குப் பயிற்சி பெற்றவர்கள் கிட்டாதது தான். பாதுகாப்புப் படைகளில் பணியாற்றுவதற்கு நமது மாநிலத்தில் பல டாக்டர்கள் முன் வந்துள்ளனர். இதைப்பற்றி நாம் எல்லோரும் மகிழ்ச்சியடைய வேண்டுமென்றாலும், நாம் குறிப்பிடவேண்டியது ஒன்று உள்ளது. பாதுகாப்புத் திட்டங்களுக்குப் பெருமளவில் டாக்டர்கள் தேவைப்படுவதால், கிராமப் பகுதிகளில் புதிய மருத்துவ மனைகளைத் திறப்பதை நாம் கொஞ்சம் மட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும். ஆனால், இந்தக் கஷ்டம் தற்காலிகமானதுதான். ஏனெனில், டாக்டர்கள், அவர்களுக்குத் துணையாய் இருக்கின்ற பலவித பணியாளர்கள் முதலியவர்களுக்கான பயிற்சி வசதிகளை விரிவுபடுத்துவதற்கான நடவடிக்கைகளை நாம் மேற்கொண்டுள்ளோம். மருத்துவக் கல்லூரிகளில் ஆண்டு தோறும் சேர்த்துக்கொள்ளும் மாணவர்களின் தொகையை 600 லிருந்து 700-ஆக உயர்த்த ஏற்பாடுகள் செய்து வருகின்றோம். எல்லா வசதிகளுடன் கூடிய ஒரு புதிய மருத்துவக் கல்லூரியை ஏதேனும் ஒரு மாவட்டத்தில் திறப்பதென அரசாங்கம் முடிவு செய்துள்ளது. இப் புதிய கல்லூரி செயல்படத் தொடங்கியதும், அத்துடன் கீழ்ப்பாக்கத்தில் இப்பொழுது குறைந்த எண்ணிக்கையுள்ள மாணவர்களுடன் இயங்குகின்ற மருத்துவக் கல்லூரியும் சேர்ந்துவிடும். டாக்டர்கள் பெறவேண்டிய 'இன்டர்னி' பயிற்சிக்குப் பதிலாக ஓராண்டு "ஹவுஸ் சர்ஜன்" பயிற்சி பெற்றால் போதுமென ஏற்பாடு செய்திருக்கின்றோம். தவிர, எம்.பி.பி.எஸ். இறுதித் தேர்வை ஓர் ஆண்டில் மூன்று தடவை நடத்தவும் உத்தேசித்திருக்கின்றோம். மேலும், ஆஸ்பத்திரிகளில் கூடுதலாக 400 நர்சுகளுக்கு பயிற்சி அளிக்கும் மற்றொரு திட்டத்திற்கும் அனுமதி அளித்திருக்கின்றோம். இவற்றைத் தவிர, கூடுதலாக 100 பார்மசிஸ்டுகளுக்கும், 135 துணை நர்சுகளுக்கும் பயிற்சி அளிக்கும் திட்டத்தையும் மேற்கொண்டுள்ளோம்.

வீட்டு வசதி.

41. நாட்டின் பாதுகாப்பு வேலைகளுக்கு அவசியம் தேவைப்படுகின்ற சிமெண்ட், உருக்கு போன்ற பற்றுக்குறைப் பொருள்களின் உபயோகத்தை ஓரளவு குறைக்க வேண்டியதன் அவசியத்தை மனதிற்கொண்டு, அரசாங்கம் தன்னுடைய வீட்டு வசதித்

1st March 1963]

திட்டங்களைப் பரிசீலனை செய்துள்ளது. ஏற்கெனவே எடுத்துக் கொண்ட எல்லா வீட்டு வசதி வேலைத் திட்டங்களும் துரிதமாக நிறைவேற்றப்படும். ஆனால் புதிய வேலைத் திட்டங்களை மேற் கொள்வதில் நிதானம் அவசியமென அரசாங்கம் முடிவு செய் துள்ளது. இருந்தபோதிலும் திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ள வீட்டுவசதித் திட்டங்களுக்காக சுமார் 77 லட்சம் ரூபாய் ஒதுக்கி யிருக்கின்றோம். சிறப்பாக, சேரி அபிவிருத்தித் திட்ட வேலை களைக் குறைத்துக் கொள்வதில்லையென அரசாங்கம் தீர்மானித்து இருக்கிறது. அடுத்த ஆண்டுத் திட்டத்தில் சேரி அபிவிருத்தித் திட்டங்களுக்காக மட்டில் 60 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். சென்னை, மதுரை, திருச்சிராப்பள்ளி, கோயம்புத்தூர் போன்ற முக்கிய நகரங்களை அடுத்து மனைக் கட்டு வசதிகள் செய்து கொடுப் பதற்காக மொத்த அளவில் நில ஆர்ஜிதம் செய்யும் வேலையையும் நாம் தொடர்ந்து நிறைவேற்றுவோம். இவ்வாறு நில ஆர்ஜிதம் தொடர்ந்து நடைபெறுவதால், பின்னர் நிதி வசதிகள் பெருகும் போது நம்முடைய வீட்டு வசதித் திட்டங்களை இன்னும் விரை வில் நிறைவேற்ற முடியும். வீட்டு வசதித் திட்டங்களை நிறை வேற்றுவதற்குப் பெரும் இடையூறாக இருப்பது சென்னை போன்ற நகரங்களில் செங்கல் விலை ஏராளமாக உயர்ந்திருப்பதாகும். எனவே, பொதுத் துறையில் இயந்திரங்களைக் கொண்டு செங்கல் தயாரிக்கும் இரு தொழிற்சாலைகளை நிறுவ அரசாங்கம் முடிவு செய்துள்ளது. இவைகளில் ஒன்றை மாநில வீட்டு வசதிக் குழு வினரும், மற்றொன்றை மாநிலத் தொழில் துறையினரும் நிர் வகித்து வருவார்கள். இந்தத் திட்டங்களுக்காகப் பட்ஜெட்டில் அடையாள நிதி ஒதுக்கம் செய்யப்பட்டுள்ளது.

### பின்னிலை வகுப்பினர் நலன்

42. பின்னிலை வகுப்பினரின் நலனில் அரசாங்கம் தொடர்ந்து விசேஷ அக்கறை காட்டி வருகின்றது. 1963-64 பட்ஜெட் மதிப் பீடுகளில் ஹரிஜனங்கள், பின்னிலை வகுப்பினர் நலன் சம்பந்த மான திட்டங்களுக்காக 3 கோடியே 90 லட்சம் ரூபாய் ஒதுக்கி யிருக்கிறோம். இதில் இந்த வகுப்புக்களைச் சேர்ந்த மாணவர்க ளுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்குவதற்கென மட்டில் 1 கோடி யே 10 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைகளை வழங்கும் திட்டத்திற்கு அரசாங்கம் அதிக முக்கி யத்துவம் அளிக்கிறது. இதற்கென, சபையின் முன் உள்ள பட் ஜெட் மதிப்பீடுகளில் 23½ லட்சம் ரூபாய் சேர்க்கப்பட்டுள்ளது.

### முதியோர் பென்ஷன் திட்டம்

43. அரசினர் கணிசமாகச் செலவிடும் மற்றொரு முக்கியமான சமூக நலத் திட்டம் முதியோர் பென்ஷன் திட்டமாகும். சென்ற மாதம் முதல் உப மதிப்பீடுகளைச் சபையில் சமர்ப்பிக்கும்போது நான் குறிப்பிட்டதுபோல, இத் திட்டத்தைச் செயலாற்றுவதில் மற்ற சில மாநிலங்களில் ஏற்பட்ட அனுபவத்தையொட்டி இத் திட்டத்திற்கு ஓர் ஆண்டிற்கு 25 முதல் 30 லட்சம் ரூபாய் வரை தான் செலவாகுமென எதிர்பார்த்தோம். ஆயினும், இதுவரை 40 ஆயிரம் பேருக்கு இத் திட்டத்தின்கீழ் உதவித் தொகை அளிக்கப் பட்டுவிட்டதால், அடுத்த ஆண்டுக்குரிய பட்ஜெட் மதிப்பீடுகளில்

இதற்கென 1 கோடியே 22 லட்சம் ரூபாய் ஒதுக்கியுள்ளோம். எந்த சமூக நலத் திட்டத்தின் வெற்றியும் அதை நிர்வகிக்கும் அதிகாரிகளின் மனப்பான்மையைப் பொறுத்திருக்கும். இந்தத் திட்டத்திற்கு இப்போது நாம் எதிர்ப்பார்க்கும் கூடுதல் செலவை சபை ஏற்கத் தயங்காது என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

### மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முன்னேற்றம்

44. திட்டங்களின் பல்வேறு அம்சங்களைப்பற்றி இதுகாறும் விரித்துக் கூறினேன். இப்போது திட்டம் முழுவதுமாக எங்ஙனம் நிறைவேறியுள்ளது என்பதைத் பரிசிலனை செய்யும் நிலையில் உள்ளோம். சட்ட சபையில் சமர்ப்பித்துள்ள பட்ஜெட் திட்டங்களிலிருந்து உருவாகின்ற திட்டத்தின் அளவு 59 கோடியே 83 லட்சம் ரூபாயாகும். பல வேலைத் திட்டங்களின் விவரங்களைப் பற்றி நான் இதுகாறும் கூறியவற்றிலிருந்து, மத்திய அரசாங்கத்திலிருந்து அடுத்த ஆண்டு கிட்டுகின்ற உதவி 4 கோடி ரூபாய் அளவிற்குக் குறைக்கப்பட்டிருந்தாலும், முக்கியமான எல்லாத் திட்டங்களுக்கும் போதிய தொகை ஒதுக்கியிருப்பது நன்கு விளங்கும். 1961-62-ல் 50 கோடி ரூபாய் அளவிற்கு திட்டத்தை நிறைவேற்றினோம். இப்போது சபையின்முன் உள்ள திருத்த மதிப்பீடுகளிலிருந்து நடப்பு ஆண்டில் திட்டச் செலவு 58 கோடியே 32 லட்சம் ரூபாய் அளவில் இருக்குமென்பது தெரியும். 1963-64 பட்ஜெட் மதிப்பீட்டில் திட்டச் செலவுகளுக்காக 59 கோடியே 83 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து, திட்டத்தின் மூன்றுவது ஆண்டு இறுதிக்குள் திட்டத்தில் சுமார் 58 சதவிகிதம் நிறைவேறிவிடும் என்பதும் தெளிவாகிறது. தேசீய நெருக்கடி காரணமாக, நமக்குப் புதிய பொறுப்புகள் ஏற்பட்டுள்ளன என்றாலும், நமது திட்டத்தின் முக்கியமான எல்லாப் பணிகளுக்கும் போதிய தொகை ஒதுக்கியுள்ளதை மேலே சொன்ன புள்ளி விவரங்கள் உறுதிப்படுத்துகின்றன. சுருங்கக் கூறின், நாம் ஏதாகிலும் கணிசமான அளவிற்குக் குறைந்திருப்பது கட்டிட வேலைகளைத்தான். மத்திய உதவியில் 4 கோடி ரூபாய் வெட்டு இருந்தாலும், எவ்விதக் குறைவுமின்றி நமது திட்ட வேலைகளை நிறைவேற்ற முடிகிறது என்றால், அதற்கு முக்கிய காரணம் பல ஆண்டுகளாகவே அத்தியாவசியமில்லாத செலவினங்களை நாம் கட்டுப்படுத்தி வந்திருப்பதுதான். எழுதுபொருள்களிலும், பிரயாணப்படி வகையிலும், அலுவலகச் சில்லறைச் செலவுகள் வகையிலும் மேற்கொண்டு சிக்கனம் செய்ய நாம் ஏற்பாடு செய்திருக்கிறோம். திட்ட வேலைகள் அல்லது பாதுகாப்பு வேலைகள் தவிர, வேறு எதற்கும் புதிதாகப் பணியாளர்களைக் கூடியவரை அனுமதிப்பதில்லை என்ற கொள்கையை நாம் இப்பொழுது பின்பற்றி வருகிறோம். இப்பொழுது நாட்டிலுள்ள நிலைமையில் இது போன்று பலவகைகளிலும் நமது நிதி வசதிகளைப் பேணுவதன் மூலம்தான் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு மிக இன்றியமையாத நமது திட்டத்தை நிறைவேற்ற முடியும்.

### 1962-63 திருத்த மதிப்பீடுகள்

45. இனி, நடப்பு ஆண்டின் திருத்த மதிப்பீடுகள், அடுத்த ஆண்டு பட்ஜெட் மதிப்பீடுகள் இவற்றைப்பற்றிய சில முக்கிய புள்ளிவிவரங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். சென்ற ஜூன்

**1st March 1963]**

மாதம் இவ்வாண்டு வரவினங்களை, புதிய வரி விதிப்புகளையும் உள்ளிட்டு, சுமார் 113 கோடியே 15 லட்சம் எனவும், செலவினங்களை சுமார் 116 கோடியே 1 லட்சம் எனவும் மதிப்பிட்டிருந்தேன். திருத்த மதிப்பீடுகளிலிருந்து, ரெவின்யூ கணக்கில் வரவு 117 கோடியே 10 லட்சம் ரூபாயாகவும், செலவு 120 கோடியே 2 லட்சம் ரூபாயாகவும் உயர்ந்துள்ளது தெரியும். ரெவின்யூ கணக்கில் துண்டு விழுவது 2 கோடியே 92 லட்சம் ரூபாய். சென்ற பட்ஜெட்டில் நான் அறிவித்த புதிய வரி விதிப்புத் திட்டங்களின் மூலம் நமக்குக் கிட்டியுள்ள அதிக வருவாயைப் பற்றி கனம் அங்கத்தினர்கள் அறிய விரும்புவார்கள். நான் அச்சமயம் புதிய வரிகளின்மூலம் 7 கோடியே 15 லட்சம் ரூபாய் கூடுதல் தொகை கிட்டுமென எதிர்பார்த்திருந்தேன். வரி விதிப்பு யோசனைகளில், தண்ணீர்த் தீர்வை உயர்வும், நகரப்புற நிலவரித் திட்டமும் இன்னும் அமுலுக்கு வரவில்லை. தவிர, மோட்டார் வண்டி வரி போன்ற சில வரிகள் விஷயத்தில் சட்டமாக்குவதற்கு முன் சில சலுகைகளைக் காண்பிக்க வேண்டியிருந்தது. மேலும், புதிய தொழில்களுக்கு வரி விலக்குத் தந்தாலும், சென்னை அனல் மின்சாரத் திட்டத்திற்குட்பட்ட தொழில்களுக்குக் குறைந்த விகிதத்தில் வரி விதித்தாலும், மின்சார உபயோக வரியிலிருந்து எதிர்பார்த்த அளவிற்கு வருவாய் கிட்டவில்லை. கடந்த பட்ஜெட்டில் அறிவித்த புதிய வரிகளிலிருந்து நடப்பு ஆண்டில் 4 கோடியே 80 லட்சம் ரூபாய்தான் கிட்டுமென இப்பொழுது எதிர்பார்க்கிறோம். புதிய வரிகளின்கீழ் ஏற்பட்ட குறைவை, ஏற்கனவேயுள்ள விற்பனை வரி போன்ற வரிகளிலிருந்தும், மின்சார போர்டுக்குக் கொடுத்துள்ள கடன், மற்ற கடன்கள் இவற்றின்மீது பெறும் வட்டியிலிருந்தும் கூடுதலாகக் கிட்டியுள்ள வரவுகள் ஓரளவுக்கு ஈடுகட்டியுள்ளன. திருத்த மதிப்பீடுகளில் கண்டுள்ள கூடுதல் செலவைப் பொறுத்தவரையில், அது பெரும்பாலும் அபிவிருத்தித் துறைகளில்தான் ஏற்பட்டிருக்கிறது ; அதுவும் சிறப்பாக கல்வி (1 கோடியே 53 லட்சம் ரூபாய்), மருத்துவம் (50 லட்சம் ரூபாய்), தொழில்கள் (1 கோடியே 8 லட்சம் ரூபாய்) துறைகளில் தான் என்பது தெரியும். திட்டத்தில் சேராத பகுதியில், போலீஸ், முதியோர் பென்ஷன் என்ற இரண்டு இனங்களிலும் அதிகச் செலவாகியிருக்கிறது. மூலதனச் செலவைப் பொறுத்த வரை, திருத்த மதிப்பீடுகளில் கண்டுள்ள தொகை (18 கோடியே 82 லட்சம் ரூபாய்) ஏற்கனவே பட்ஜெட் மதிப்பீட்டில் நிர்ணயித்த தொகைக்கு (ரூபாய் 18 கோடியே 85 லட்சத்துக்கு) ஏறக்குறைய சமமாகும். இவ்வாண்டு நிதி மார்க்கெட்டின் நிலை சாதகமாக விருந்ததால், ஏற்கனவே நாம் எதிர்பார்த்த 10 கோடி ரூபாய்க்குப் பதிலாக, 13 கோடியே 13 லட்சம் ரூபாய் பொதுக் கடனை எழுப்ப முடிந்தது. ஆனால், சிறு சேமிப்புத் திட்டத்தின்கீழ் நாம் எதிர்பார்த்ததைவிடக் குறைவாகத்தான் கிடைத்துள்ளது. நடப்பு ஆண்டில் நம்முடைய வழிவகை நிதி நிலை (ways and means) சரளமாக இல்லை. எனினும், நடப்பு நிதி ஆண்டின் இறுதியில் 73 லட்சம் ரூபாய் இருப்பு இருக்குமென எதிர்பார்க்கிறோம்.

[1st March 1963

### 1963-64 மதிப்பீடுகள்

46. இப்பொழுது 1963-64-ம் ஆண்டின் பட்ஜெட் மதிப்பீடுகளைக் கவனிக்கலாம். இப்பொழுதிருக்கின்ற வரி விதிப்பு அளவில், அடுத்த ஆண்டில், ரெவின்யூ கணக்கில் வரவு 124 கோடியே 45 லட்சம் ரூபாய் என்றும், செலவு 127 கோடியே 19 லட்சம் ரூபாய் என்றும் மதிப்பிடுகிறேன். எனவே, ரெவின்யூ கணக்கில் 2 கோடியே 74 லட்சம் ரூபாய் துண்டு விழுகிறது. மதிப்பீடுகளை நிர்ணயிப்பதில் இப்பொழுதுள்ள விற்பனை வரி, ஸ்டாம்பு கட்டண வரி போன்ற வரிகளிலிருந்து சாதாரணமாகவே ஆண்டுதோறும் கூடுதலாக கிடைக்கின்ற வருவாயையும் மனதிற் கொண்டுள்ளோம். சென்ற பட்ஜெட்டில் மேற்கொண்ட புதிய வரி விதிப்புத் திட்டங்களின்மூலம் அடுத்த ஆண்டு 9 கோடி ரூபாய் வருமெனக் கணக்கிட்டிருக்கிறோம். இங்ஙனம் நம்முடைய வருவாய் உயர்ந்திருப்பினும் திட்ட வேலைகள் துரிதமாக நிறைவேறி வருவதாலும், அவசரகால நிலையையொட்டி எழுந்துள்ள பல புதுப் பொறுப்புகளை ஏற்றிருப்பதாலும், ரெவின்யூ கணக்கில் 2 கோடியே 74 லட்சம் ரூபாய் துண்டு விழுந்திருக்கிறது.

47. ரெவின்யூ கணக்கில் துண்டு விழும் தொகை கணிசமாக விருப்பினும், நான் புதிதாக ஒரு வரியையும் விதிப்பதாக உத்தேசிக்கவில்லை. மத்திய விற்பனை வரி விகிதத்தை உயர்த்துவதென, மத்திய அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. இந்த வரியை மத்திய அரசாங்கம் விதித்தபோதிலும், அதை வசூலித்துப் பயனடைவது மாநில அரசாங்கமாகும். எனவே, ரெவின்யூக் கணக்கில் துண்டு விழும் தொகையில், ஒரு பகுதியை இந்த வரியிலிருந்து கூடுதலாக கிட்டும் தொகை ஈடு செய்யும் என எதிர் பார்க்கலாம். தவிர, சமீப ஆண்டுகளில் மோட்டார் கார்கள், காமிராக்கள் போன்ற சில ஆடம்பரப் பொருள்களின் (Luxury Articles) மீது ஒரே மாதிரி விகிதத்தில் விற்பனை வரி விதிக்கும் கொள்கையை மாநில அரசாங்கங்கள் பின்பற்றி வருகின்றன. இக்கொள்கையைப் பின்பற்றி, மற்ற மாநிலங்கள் ஆடம்பரப் பொருள்களின் மீது விதிக்கப்படும் விற்பனை வரியை உயர்த்தினால், நாமும் அப்பொருள்களின் மீதுள்ள வரி விகிதங்களை மாற்றியமைக்க வேண்டிவரும். அம்மாதிரி ஆடம்பரப் பொருள்களின் மீதுள்ள விற்பனை வரி விகிதங்களை மாற்றியமைப்பதிலிருந்து கொஞ்சம் அதிக வருவாய் கிடைக்கலாம்.

### வழிவகை நிதிநிலை

48. பட்ஜெட்டில் ரெவின்யூ கணக்கில் துண்டு விழுவதைப்பற்றி நாம் பெரும் கவலைகொள்ளவேண்டியதில்லை. ஆனல், வரும் ஆண்டிலும் நமது வழிவகை நிதிநிலை தொடர்ந்து இக்கட்டாக இருக்கும் என்பதை நாம் மனதிற்கொள்ளவேண்டும். வரும் நிதி ஆண்டு ஆரம்பத்தில் நமது ரொக்க இருப்பு கணிசமானது அல்ல. ரூபாய் 20 கோடியே 75 லட்சத்திற்கு மின்சாரத் திட்டங்களை நிறைவேற்றுவதோடு, 18 கோடியே 87 லட்சம் ரூபாய் அளவிற்கு மற்ற மூலதனத் திட்டங்களை நாம் நிறைவேற்றவேண்டியிருக்கும்.

